


Vol. I. No. 9.] JULY, 1888. [Price 1 Pie Monthly.

## SACRIFICE.

Sacrifice holds a very high place in the Religions of the world, and especially so in the Religions of India. In the Vedas we read, "By sacrifice the gods created the worlds; by sacrifice they became immortal." Again, "By sacrifice the ancient Fathers, the first sacrificers, delivered the world from chaos, gave birth to the sun, kindled the stars, and became equal to the greatest of the gods." And "by sacrifice their children are exalted to the same sphere of immortality and blessedness." In the Vishnu Purana it is said, "By sacrifice the gods are nourished and mankind are supported and made happy in this world and in the world to come."

The Vedic sacrifices were divided into three great classes with many sub-divisions under each; viz. *Havis-yajna*, meat-offering; *Pasubandha*, animal-offering; and *soma-yajna*, soma-offering. These offerings consisted of the choicest gifts of the herds and flocks,—bullocks, sheep, milk and butter—and the best products of the fields and gardens—fruits, grains and honey. And such sacrifices are offered by Hindus at the present day. But in addition to these, Hindus in ancient times sacrificed human beings! Indeed it is said in the Vedas that man is the chief of the sacrificial victims—*Purusha Prathanah Pasunam*. Fruits, grains, flowers, honey and butter, were offered to the gods as *thank-offerings*, and slaughtered animals as *sin-offerings*. Every day Hindus place the former before the gods as an expression of gratitude for benefits received; but they sacrifice animals chiefly when they think that the gods are angry with them on account of sin. They believe that the blood of animals will take away the anger of the gods and restore their favour.

The Jewish people through whom God gave us the Bible offered both bloody and unbloody sacrifices. The former as *sin-offerings* and the latter as *thank-offerings*; and we are told that God commanded them to do so! Why? In order to teach them that they were sinners deserving the punishment of eternal death, and that Jesus Christ would come into the world at the appointed time and suffer death for them, and so give Himself a sacrifice for the sins of the whole world. All pious Jews saw in the sacrifices of bulls, sheep and goats, an emblem of the great sacrifice of Jesus; and they were saved from the consequences of sin, not on account of the animals which they offered, but on account of their *faith* in the coming sacrifice of Jesus. This is the *true* meaning of sacrifice all over the world. But men under the influence

## யாகம்.

சர்வதேசமதங்களிலும் விசேஷமாய் இத்தேசத்து மதாசாரங்களிலும் யாகசேவை முக்கியமானதாயிருக்கிறது. வேதங்களிலே, "யாகத்தினாலே தேவர்கள் உலகங்களை உண்டுபண்ணினார்கள், யாகத்தினாலே அவர்கள் அமரர்கள் ஆனார்கள்" என்றும்; "யாகத்தினாலே முதல்முதல் யாகஞ்செய்த முன்னோர்கள் உலகத்தை உருவாக்கிச், சூரியனைப் பிறப்பித்து, நட்சத்திரங்களுக்கு ஒளியூட்டி தேவர்களில் முதன்மையானவருக்குச் சமமானார்கள்" என்றும்; "யாகத்தினாலே அவர்கள் சந்ததியார்களும் சாகாமையும் சவுக்கியமும் நிறைந்த ஸ்திதிக்கு உயர்த்தப்படுகிறார்கள்" என்றும் வாசிக்கிறோம். "யாகங்களினாலே தேவர்கள் போஷிக்கப்படுகிறார்கள், மனுஷர்கள் இம்மையிலும் மறுமையிலும் ஆதரிக்கப்பட்டு ஆனந்தமடைகிறார்கள்," என்றும் விஷ்ணுபுராணத்திலே சொல்லியிருக்கிறது.

வேதங்களில் சொல்லியிருக்கும் யாகங்கள் அநேக உட்பிரிவுகள் அடங்கிய மூன்று பெரும் பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:— ஹவிர் எக்கியம், (மாமிசபலி); பசுபந்தம், (மிருகபலி); சோமஎக்கியம், (சோமபலி). இந்த எக்கியங்களிலே மந்தைகளில் முதன்மையான ஆடுமாடுகளும், பாலும் வெண்ணெயும், பழம், தானியம், முதலிய உசிதமான பயிர்வகைகளும், தேனும் சமர்ப்பிக்கப்பட்டன. தற்காலத்திலும் ஹிந்துக்கள் இப்படிப்பட்ட எக்கியங்கள் செய்து வருகிறார்கள். இது நிற்க, அவர்கள் பூர்வத்திலே நரபலிகளும் செலுத்திவந்தார்கள். ஏனென்றால் வேதங்களிலே புருஷ பிரதான பசூநாம், அதாவது மனுஷன் யாகவஸ்துக்களில் சிரேஷ்டன் என்று ஒரு ஸ்லோகமுண்டு. பழம், பூ, தானியம், தேன், வெண்ணெய் முதலானதுகள் ஸ்தோத்திரபலிகளாகவும், கொலையுண்ட மிருகங்கள் பாவம்போக்கும் பலிகளாகவும் செலுத்தப்பட்டன. பிரதிதினமும் இந்துக்கள் கனிவர்க்கங்கள் முதலானவைகளைத் தாங்கள் பெற்ற நன்மைகளுக்கு நன்றியறிதலாகத் தங்கள் தேவதைகளுக்குச் சமர்ப்பிக்கிறார்கள்; ஆகிலும் தேவதைகள் பாவத்தின்பொருட்டுத் தங்கள்பேரில் கோபமாயிருக்கிறார்களென்று நினைக்கும்பொழுது அவர்கள் பெரும்பாலும் மிருகங்களைப் பலியிடுகிறார்கள். மிருகங்களின் உதிரமானது தேவர்களின் கோபத்தைத் தணித்து அவர்கள் தயவைச் சம்பாதிக்கும் என்பது அவர்கள் நம்பிக்கை.

கடவுள் நமக்கு அருளிய சத்தியவேதத்தை எழுதின யூதர்கள் உதிரம் கலந்ததும் கலவாததுமான பலிகள் செலுத்தினார்கள். அவைகள் முறையே பாவம் போக்கும் பலிகளும் ஸ்தோத்திர பலிகளுமாயிருந்தன. அவர்கள் நித்திய மரணத்திற்குப் பாத்திரமான பாவிகளென்றும், ஜகத்ரட்சகர் குறித்த காலத்தில் இவ்வுலகத்தில் எழுந்தருளி, அவர்களுக்காக மரணமடைந்து, அந்தப்படியே சர்வ மனுஷர்களின் பாவங்களுக்காக தம்மைத்தாமே எக்கியம் செய்துகொள்ளுவார் என்பதை உணர்த்தும்பொருட்டு, கடவுள் அவைகளை அவர்களுக்குக் கட்டளையிட்டார் என்று வாசிக்கிறோம். பக்தியுள்ள யூதர்கள் யாவரும் ஆடுமாடு முதலியவற்றின் எக்கியத்திலே இயேசுவின் திருயாகத்தை அறிகுறியாகக்கண்டு, அவர்கள் பலியிட்ட மிருகஜீவன்களினாலல்லாமல், வரப்போகிற திவ்விய பலியில் அவர்கள் வைத்திருந்த விசுவாசத்தினாலே பாவத்தின் தண்டனைக்குத் தப்பினார்கள். உலகமெங்கும் இதுவே யாகத்தின் கருத்தாயிருக்

of sin gradually lost all knowledge of the *true* meaning of sacrifice a symbol pointing to Jesus, "the lamb of God," and believed that by the act of sacrificing animals *alone* they could atone for sin and obtain the favour of God. But this is a wrong idea altogether. Such sacrifices cannot save a single soul. They are only *emblems* of the sacrifice of Jesus, the Fulfiller of all sacrifices. He has sacrificed Himself a sin-offering for the world. He has suffered the punishment due to us for transgressing God's laws, and so has opened a way by which God can be just and yet the Saviour of all men. Believe then in Jesus. Cease to sacrifice to dumb idols. Give yourselves, body, soul and spirit, to God through Christ as a holy sacrifice, and you will obtain happiness in this life and heavenly felicity in the life beyond death.

கிறது. ஆகிலும் பாவத்தின் பலத்தால் மனிதர்கள் வரவர யாகத்தின் உண்மைப்பொருளை உள்ளாக மறந்து அது தேவாட்டுக்குட்டியாகிய இயேசுவை குறிப்பித்ததென்று எண்ணாமல், மிருகங்களைப் பலியிடுவதினால்மாத்திரம் பாவ விமோசனமும் தேவதயவும் அடையலாமென்று நம்பிக்கொண்டார்கள். இதுவோ சுத்தப்பிசகு. அப்படிப்பட்ட பலிகளினாலே ஒரு ஆத்துமாவாகிலும் கரையேறமாட்டாது. யாகங்களை எல்லாம் நிறைவேற்றின எம்பெருமான் இயேசுவுக்கு அவை அறிகுறிகளாய் மாத்திரம் இருந்தன. அவரே உலகத்திற்காக தம்மைத்தாமே பாவம் போக்கும் பலியாக ஒப்புக்கொடுத்தார். நாம் தேவப் பிரமாணங்களை மீறியதால் உண்டான தற்பயனை அவரே அனுபவித்து, கடவுள் நீதிவழுவாமல் தமது மக்களை மீட்கத்தக்க ஓர் வழியை உண்டுபண்ணினார். ஆகையால் இயேசுவை விசுவாசியுங்கள். வாயில்லா விக்கிரகங்களுக்கு பலியிடுவதை விட்டுவிடுங்கள். கிறிஸ்துவின் மூலமாய் கடவுளுக்கு உங்கள் மனம் மொழி மெய்யைப் பரிசுத்தபலியாகச் சமர்ப்பியுங்கள்; அப்பொழுது உங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் பூரண பாக்கியம் உண்டாகும்.

## CASTE: ITS EVILS.—சாதிபேதமும் அதின் கெடுதியும்.

ஒரு வகுப்பாரை உயர்த்தி மற்றொரு வகுப்பாரைத் தாழ்த்துவதே சாதிபேதத்தின் இயல்பு. பிராமணர்கள் பலவிதமாய் உயர்வடைந்திருக்கிறார்கள். "தெய்வாதீனம் சகத்ஸர்வம், மந்திராதீனந்து தெய்வதம், தன்மந்திரம் பிராமணாதீனம், பிராமணோ மமதேவதா" என்பது யாவருக்கும் தெரிந்தவிஷயமே. அவர்கள் பூதேவர் என்னப்படுகிறார்கள். அவர்கள் தேகம் பரிசுத்தமாய்ப் பாவிக்கப்படுகின்றது; பலவிதமான நன்மைகளும் மிராசுகளும் அவர்களுக்கே உரியன. அவர்கள் பட்சமாகவே அநேக சட்டங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மநுதர்ம சாஸ்திரமானது பிராமணமேன்மையை ஸ்தாபிக்கும்பொருட்டே இயற்றப்பட்டதாகத் தோன்றுகின்றது. மற்றச்சாதியார் பலவிதமாய்த் தாழ்வடைந்திருக்கிறார்கள்; கைத்தொழிலே அவர்கள் சீவனோபாயமாயிருக்கின்றது; வேதம் ஓதல் அவர்களுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது; எந்தக் குலத்தாராயினும் தம் குலத்துக்கு உயர்ந்தகுலத்தில் பிரவேசித்தல் கூடாமையாயிருக்கிறது. இதுநிற்க:—

i. சாதிபேதமானது எல்லா தர்மகுணத்திற்கும் நேர்விரோதமாயிருக்கிறது. உலகத்திலே சிலர் தனவான்களும், சிலர் தரித்திரர்களும், சிலர் ஆண்டவர்களும், சிலர் அடிமைகளும், சிலர் கற்றவர்களும், சிலர் கல்லாதவர்களுமாயிருப்பதால், சனங்களுக்குள்ளே இந்தக் காரணங்களினாலே உயர்வு தாழ்வுகள் உண்டாகிறது இயல்புதான். இந்தப்பேதங்கள் நிலையான பேதங்களல்ல. தரித்திரர் தனவான்களாகிறதும், கல்லாதவர்கள் கற்றவர்களாகிறதும், அடிமைகள் ஆண்டவர்களாகிறதும் நாம் சகஜமாய்ப் பார்த்துவருகிறோம். சாதிக் கட்டுப்பாட்டினால் உண்டாகிற உயர்வுதாழ்வுகளோ ஒருக்காலும் மாறாதவைகளாயிருக்கின்றன. குணம், கல்வி, நடத்தை எவ்வாறாயினும் ஈனனாய்ப் பிறந்தவன் எப்பொழுதும் ஈனனும், உயர்ந்தவனாய்ப் பிறந்தவன் எப்பொழுதும் உயர்ந்தவனுமாயிருக்கவேண்டும். பிறப்பினாலே ஒருவன் ஆண்டவனாகிறான்; பிறப்பினாலே ஒருவன் அடிமையாகிறான். சூத்திரனாய்ப் பிறந்தவன் எத்தனைதான் புத்தி தீட்சணமும் முயற்சியுமுள்ளவனாயிருந்தாலும் அவன் ஒருக்காலும் பிராமணனாகான். அன்பர்களே, இதென்ன அநியாயம்?

ii. சாதிபேதமானது குலத்துடன் குலத்தையும் ஆளுடன் ஆளையும் வேறுபடுத்தி, ஒருவரை ஒருவர் பகைக்கச் செய்கின்றது. அது அன்பென்னும் ஆற்றைப் பாயவொட்டாமல் அதின் ஊற்றை அடைக்கும் பெரும் பாறையாயிருக்கின்றது. தத்தம் சாதிக்குரிய ஆசாரத்தினாலும், நடை உடை பாவனைகளினாலும் பிரத்தியேகப்படுத்தப்பட்டிருக்கிறவர்கள் அந்நியரை உபசரித்தலும் வியாதிக்காரருக்கு உதவிசெய்தலும் கூடாமையாயிருக்கிறது. புலி என்ன பசித்தாலும் பசும்புல்லைத் தின்னாதது போல மேற்குலத்திற் பிறந்தவர் கீழ்க்குலத்தவரிடத்தில் ஒருக்காலும் உணவெடுத்து உண்ணலாகாது. உண்டாலோ சாதிப் பிரஷ்டத்துக்காளாவார்கள். ஒவ்வொருவனும் தன்தன் குலகௌரவத்தையே நோக்கவேண்டியதால், சுயப்பிரீதி, சுசாதிமித்திரத்துவம், அன்பில்லாமை, கலகப்பிரியம் முதலான குணங்கள் தோன்றி தேசத்தின் நாசத்துக்கேதுவாய்க் கிரியை செய்கின்றன. பலபேர் ஓரிடத்திற் கூடியிருந்து சந்தோஷமாய்ச் சம்பாஷித்து விருந்துண்பதினாலோ குடும்ப சிநேகமும், அயலார் ஐக்கியமும், நட்புவிர்த்தியும், நாட்டுவிர்த்தியும் பெரும்பாலும் விளைந்துவருவதை நாம் அடிக்கடி காண்கிறோம். சாதிபேதமானது இப்பேர்ப்பட்ட கூட்டங்களுக்குத் தடையாயிருப்பதினால் ஹிந்துக்கள் மேற்சொல்லிய நற்குணநற்செய்கைகள் அற்றவர்களாயிருக்கிறார்கள்.

iii. சாதிபேதமானது பிரபஞ்ச விதிகளோடு போராடும் ஓர் கொடிய சத்துருவாயிருக்கிறது. வர்ணபேதவிதியின் பிரகாரம் ஒருவன் ஒரு தொழிலைநடத்தும் சக்தி அவன் திறமை அல்ல, அவன் பிறப்பே. தச்சன் மகன் தச்சுவேலை செய்யவேண்டும்; இடையன்மகன் இடையன்வேலையை செய்யவேண்டும். அவனவன் தனக்கு இஷ்டமானதும் தன் திராணிக்கேற்றதுமான தொழிலையல்ல, தன் தந்தை செய்த தொழிலையே செய்யவேண்டும். இந்த சாதிக்கட்டுப்பாட்டினால் உண்டாகும் தீமை கொஞ்சமல்ல. ஒருவன் மனதாரச் செய்கிற வேலைக்கும் மனமற்றுச் செய்கிற வேலைக்கும் வெகு வித்தியாசம் உண்டு. பலாத்காரமாய்ச் செய்யும் ஒரு தொழிலிலே சிறப்பும் சாமர்த்தியமும் தோன்றமாட்டாது. செய்கிறவன் அதை ஊக்கத்துடன் செய்யவுமாட்டான். கல்விப்பிரியனான ஓர் தச்சன் பிள்ளை கட்டாயத்தினாற் செய்யும் மேசை நாற்காலி முதலியன எப்படியிருக்கும்? அன்பிருந்தால் மலையும் அசையும் என்பதுபோல அன்புடன் இயற்றும் வேலையிலே மாத்திரம் நாளுக்குநாள் விர்த்தியுண்டாகும். இந்தச் சாமானிய பிரமாணத்துக்கு சாதிபேதமானது நேர்விரோதமாயிருக்கிறது. இத்தேசத்துக் கைத்தொழில்களிலே 2000வருஷ காலமாய் யாதொரு விர்த்தியும் இல்லை. ஆதியிலிருந்து திட்பநுட்பமும், புத்தி சக்தியும், சூன்யமாய்ப் பறந்துவிட்டது. ஹிந்துக்கள் தங்கள் முன்னோர் மகத்துவத்தையும், தங்கள் மன்னவர் மாட்சிமையையும் எடுத்துரைப்பதில் யாதொரு பயனும் இல்லை. அவர்களை வேறுபடுத்திக் கெடுத்துவிட்ட சாதிபேதம் என்னும் சர்ப்பத்தை நாளதுவரையும் பால்வார்த்து வளர்த்துவருகிறார்களே. பூர்வ ஆரியரின் ஐக்கியத்தை அழித்து, அவர்கள் புத்தியைக் கெடுத்து, அவர்கள் பொருளைப் பறக்கடித்து, அவர்கள் கைத்தொழிலை நிர்விருத்தியாக்கி, அவர்கள் சுவாதீனத்தை அபகரித்து, அவர்களைத் தங்கள் பேராசைக் குருக்களுக்கு அடிமைகளாக்கிவிட்ட இந்தச் சாதிபேதப் பேயை இன்னும் தழுவிவருகிறார்கள். தங்கள் அழிவைப் பார்த்துப் புலம்பினாலும் அவ்வழிவின் காரணத்தை ஆவலுடன் கட்டி அணைத்துக்கொள்கிறார்கள்.

iv. சாதிபேதமானது விக்கிரகாராதனையை விர்த்திபண்ணுகின்றது. பிராமணர்கள்மாத்திரம் வேதத்தை வாசிக்கலாம் என்னும் விதியினால், மற்றச் சாதியாருக்கு மதத்தைப்பற்றிய அறிவு இல்லாமற்போயிற்று. மதவிஷயங்கள் மாத்திரமல்ல, வித்தைவிஷயங்களும் அவர்களுக்கு விலக்கப்பட்டன. அவர்களுக்கு மதோபதேசம் செய்வார் யாரும் இல்லை. தாங்களும் சுயேச்சையாய் மதஆராய்ச்சிசெய்து ஞானமார்க்கத்தைக் கண்டடைவதும் கூடாமற்போயிற்று. இந்தப்பிரகாரம் உள்ளக் கண்மூடவே, ஊனக்கண் விக்கிரகத்தை நோக்கலாயிற்று. விக்கிரகங்கள் அதிகரித்து விபவங்கள் விளங்கவே, பிராமணனுக்குப் பிரயோசனமும், சூத்திரனுக்குச் சந்தோஷமும் உண்டாயிற்று; நாடெங்கும் விக்கிரகாராதனை பிரபல்லியமாய், ஒரு தீமை இன்னொரு தீமைக்குத் தாய் ஆயிற்று. இத்தேசத்தாரை அழித்துவரும் இந்தச் சாதிபேதம் இவ்வுலகின்கண் வேறெங்கும் இல்லை. இந்தத் தீமை இத்தேசத்தினின்றும் நிர்மூலமாக ஹிந்துக்கள் யாவரும் முயற்சிசெய்யவேண்டும்.



## ANSWERS TO OBJECTIONS: சந்தேகநிவிர்த்தி.—BIRTH.—பிறவி.

"கற்றாலென்னபலன் கருத்துற்றாலல்லோ கற்றபலன்
உற்றாலென்னபலன் உறவற்றாலல்லோ உற்றபலன்
அற்றாலென்னபலன் அருள்பெற்றாலல்லோ அற்றபலன்
பெற்றாலென்னபலன் பிறவியற்றாலல்லோ பெற்றபலன்"

என்று ஒருநாள் ஒரு பெரியவர் எனக்குச் சொன்னார். இவருக்குப் பருவம் எண்பத்துநாலு. வேதாந்த சித்தாந்த ஆராய்ச்சியுடையவர். தமக்கியன்றமட்டும் சத்தியத்தைத் தெளிந்து பற்றிக்கொண்டவர். இப்படிப்பட்டவர் இங்ஙனஞ் சொல்லவே யான் திகைத்து அவர் முகம்நோக்கி "பிறவி" என்றாலென்னவென்று கேட்டேன். அது "ஜந்ம சுபாவந்தான்" என்று, இதுவரையும் உமக்கிது தெரியாதிருந்ததாவென்னும் வியப்புத்தோன்ற, விடை பகர்ந்தார். இவ்வளவு சொல்லவே அர்த்தம் எனக்குமனதிலாகிவிட்டது. அதை யிங்கே விளக்குகின்றனன்.

**பிறவி** என்ற சொல் பிறப்பு முதலேயுண்டாகிய குணதோஷங்களுக்குப் பெயராய் நாடோடிய வழக்கத்திலும் வழங்குகின்றதன்றோ? ஜந்மத்திலுண்டாகிய குணத்திலும் தோஷத்திற்கே **பிறவி** என்ற பெயர் பெருவழக்காயும் இருக்கின்றதே. ஒருவனிடத்து, ஒரு குதிரையினிடத்து, ஒரு நாயினிடத்து முறையே புத்திதீட்சணம், அதிவேகம், வெகுகூர்மை துலங்கும்போது, இது எப்படியாயிற்று என்று விசாரிப்பவருக்கு, பிறவியின் காரியமென்பதாய்—அவன் பிறந்த பிறவி, அவன் பிறந்த வம்சம், அவன் தகப்பனும் பாட்டனும் அப்படிப்பட்டவர்கள் என்றும்; அது அரபிப்பிறவி, அது வைபோகிப்பிறவி, அதுக்கு அது பிறவி வேகாட்டம் என்றும்; அது சிப்பிப்பாறைப் பிறவி, அது புல்டாக் (Bull-dog) பிறவி என்றும்—சொல்வதைக் கேட்கிறோம். ஒருவன் பிறந்ததுமுதலே பைத்தியக்காரனாய், ஊமையனாய், குருடனாய், அங்கவீனனாயிருந்தால் அது **பிறவி** என்று சொல்வது பெருவழக்காயிருக்கிறது. இடையில் நேர்ந்த சம்பவமானால் — இவன் இடையில் இப்படியானான்; இது இடையில் இப்படியானது என்று சொல்வதும் இயல்பாயிருக்கிறது.

இவ்வகையே அறிவில் முதிர்ந்த பெரியோர் மனிதருடைய நல்லொழுக்கந் தீயொழுக்கங்களால் விளையும் பலாபலன்களையும் உள்ளும் புறம்புமாயுண்டாகுஞ் சுகதுக்கங்களையும் பகுத்தறிந்து சுகாநுபவத்துக்கேதுவான நல்லொழுக்கத்தின்கண்ணே நிலைநின்றொழுகக் கருதி வலிந்து முயன்றுஞ் செல்லாமை கண்டு காரணத்தை உற்று நோக்குழி, பிறப்புத்தொட்டே பெற்ற சீர்கேடெனத் தெளிவுற்றனர். மானிடரைப் பீடித்து நிற்குஞ் சீர்கேடும் மனக்கோட்டமும் பிறவியில் உண்டாகிய குணக்கானதால் அதை **ஜந்மம்** என்றும் **பிறவி** என்றும் பெயரிட்டு வழங்கினர்.

இந்தப் **பிறவி**யினது சுபாவமும் அதனாலுண்டாகுந் தீவினைகளின் தோஷமும் நிவாரணமாகும் வழிவகை எதுவென்று ஆராய்வதே ஞானிகளின் முக்கிய முயற்சியாயிருந்திருக்கிறது. இங்ஙனமுயன்ற ஞானிகளின் அபிப்பிராயபேதமே பற்பல சமயபேதங்களுக்குக் காரணமாயிற்று. அவரவர் தத்தம் அபிப்பிராயத்தை யுபதேசிக்க அவரவரை வழிபட்டசீஷர்களே சமயபேதத்தவராயினர். வாத பித்த சிலேட்டும நாடிகள் தத்தம் நிலையிலே நின்றியங்கில் சுகம் என்றும், நிலைபிறழ்ந்து நடக்கில் தோஷம் என்றும் அறிபவர் எங்ஙனம் தக்கமுறைசெய்து தோஷம் நீங்கவும் சுகம் பிறக்கவும் பக்குவந்தேடுவரோ, அங்ஙனம் கன்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் தத்தம் நிலைபிறழ்ந்து நிற்பதையும் அதனால் மனோவாக்குக்காயங்களில் விளையுந் தீவினைகளையும் உணர்ந்தபேர்கள் சுகம் பெறுவதற்கான வழிவகைகள் எதென்று அவ்ஞானிகள் சொல்லிய முறைகளை ஆராயலுற்றனர். அவருட் சிலர் ஞானிகள் சொல்லிய முறையின்படி பக்குவஞ்செய்து பார்த்துங் குணங்காணாததால் — "எந்தநிலை பேசினும் இணங்கவிலையே" என்றும்; வேறுசிலர்—

"நீற்றைப்புனைந்தென்ன நீராடப்போயென்ன நீ மனமே
மாற்றிப் பிறக்கவகை யறிந்தாயில்லை, மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன; கண்டாய்
ஆற்றிற் கிடந்து துறையறியாமல் அலைகின்றதே"

என்றும், வேறுசிலர்— "சாத்திரத்தைச்சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்—சூத்திரத்தைக்கண்டு சுகம்பெறுவதெக்காலம்" என்றுஞ் சொல்லலுற்றனர்.

ஆயினும், இங்ஙனம் ஆராயலுற்றவரின் மொத்தத்தெளிவும் துணிவும் எப்படியிருந்ததெனில்:—சகல சீர்கேட்டுக்குங் காரணம் பிறவியே; இப்பிறவி மாறி அருட்பிறவி யடைந்தாற்றான் சுகம் பிறக்கும். "சுரூபஞ்சுட்டாற் போம் குணஞ்செத்தாற் போம்" என்றபடிக்கு இப்பிறவி தீவினைக்குச் செத்து நல்வினைக்குப் பிழைக்கிறதாகவேண்டும்; இந்த ஜந்மசுபாவம் நீங்கி புநர்ஜந்மசுபாவம் பெறல்வேண்டும். "மாமிசத்தினாற் பிறப்பது மாமிசமாயிருக்கும், ஆவியினாற் பிறப்பது ஆவியாயிருக்கும்" என்றதற்கிசைய சடசம்பந்தமான இப்பிறவிபோக ஆவிசம்பந்தமான மறுபிறவியாகவேண்டும். இயல்நிலையறவும் அருள்நிலையுறவும் வேண்டுமென்பதாகவே இருந்திருக்கிறது. இது ஆங்காங்கு அவர்கள் உரைத்தவற்றுள் இலைமறை கனிபோல் இருக்கக் காணலாம்.

அன்னவர் உரையின்பயன் காலாந்தரத்தில் மறப்பிற்கிரையாகிவிட, "சாலம்போம் வார்த்தைநிற்கும்" என்னும் பழமொழிக்கிசைய, அவர் உரைத்த — "பிறவி யறவேண்டும்; புநர்ஜந்மம் அடைவதே அதற்குவழி" என்ற—வார்த்தைகள்மாத்திரம் நின்றன. பின்வந்தவர்கள் அவ்வார்த்தைகளின் பொருளை உற்றாராயாமல் தம் தம் பிழைப்புக்கும் கோட்பாட்டுக்கும் இணங்க அவற்றிற்கு அர்த்தங்கற்பித்து தாங்கள் கற்பித்த அர்த்தம்பட அப்பதங்களைப் பிரயோகித்து வழக்கத்திலுங் கொணர்ந்துவிட்டனர். தம்மவரை "எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதா னியாதினும் அரிதரிதுகாண் — இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏதுவருமோ அறிகிலேன்" எனப் புலம்பவும் வைத்தனர்.

நண்பரே! உங்களின் சரீரசுகநிலையறிவதற்குக் கைநாடி என்ன சீராயிருக்கிறதென்று பார்க்கிறீர்களல்லவா. அதுபோல உங்கள் ஆத்தும சுகநிலையறிவதற்கு மனநாடி என்ன சீராயிருக்கிறதென்று பாருங்கள். புறக்குறிகளினாலே சுகக்கேடு பெரும்பான்மையும் அறியப்படுவதில்லை. வெளிப்புடையான குறிப்புகளிருந்தும் சில ரோகிகளுக்கு அவைகள் தங்களின் ரோகத்தைக் காட்டுங் குறிகளென்றும் தாங்கள் ரோகமுள்ளவர்களென்றுந் தெரியாதிருப்பதுமுண்டு. ஆகையால் அநேக விஷயங்களில் கண்ணொளி சொல்லப் புண்ணொளி அறியவேண்டியதாக இருக்கிறது. நீங்கள் உங்கள் ஆத்தும சுகநிலையைக் கவனியுங்கள். அதன் குணங்குறிகளைப் பரிசோதியுங்கள். கண்ணொளியை நாடித்தேடி விசாரியுங்கள். மனம் மொழி மெய்களில் ஆரோக்கியமில்லையென்றே துலங்கும். பிறவித்தோஷம் பற்றியிருக்கிறதென்றே விளங்கும். இதினால் துர்நினைவு, தூஷணமொழி, தீயசெயல் விளைந்துகொண்டேயிருக்கின்றனவென்பதோ தெரிந்த காரியம். இந்தப் பிறவி ரோகந்தீர என்ன செய்வேன், எங்கே போவேன் என்று நாடித் தவியுங்கள். நீர் விசாரிகளாயிராதேயுங்கள். பிறவித்தோஷமும் விளையுந் தீமையும் நிவாரணமாகவும், நீங்கள் அருட்பிறவியடைந்து பரம சுகவாழ்வு பெறவும் இயேசுகிறிஸ்துவின் திருவடி சரணடையுமின்.

"பிறவிப்பெருங்கடல் நீந்துவர்நீந்தார்
இறைவனடி சேராதார்."

## MAN'S HIGHEST DUTY.—பரம புருஷார்த்தம்.

**ப**கவான் அருளால் நாம் அனைவரும் இப்பிரபஞ்சத்தில் மானிடஜென்மிகளாய் வாழ்ந்துவருகிறோம். நம்மைச்சூழ நானாவிதவிலங்குகளும்பறவைகளும் நடமாடிவருகின்றன. நமக்கிருக்கிறதுபோலவே அவைகளுக்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கிற ஐந்துணர்ச்சியும் உண்டு. நாம் தின்று, குடித்துவருகிறதுபோலவே, அவைகளும் தின்று குடித்துத் தங்கள் பசிதாகங்களைத் தீர்த்துக்கொள்ளுகின்றன. நாம் பிறந்து இறக்கிறவண்ணமே, அவைகளும் பிறந்து இறக்கின்றன. இவ்விதமாய்ப் பார்த்தால், நமக்கும் அவைகளுக்கும் யாதொரு பேதம் இல்லாததாகக் காணப்படுகின்றது. கூர்ந்துபார்த்தாலோ சிறந்த விகற்பங்கள் விளங்கும். தூரத்திலே இருக்கிற நீலமும், பச்சையும் ஒருநிறமாகத் தோன்றினாலும், சமீபத்திற்போய்ப் பார்ப்பவர்க்கு நீலம் நீலந்தான், பச்சை பச்சைதான். அதுபோலவே மக்களும் விலங்குகளும். மக்கள் இயற்கை வேறு; மிருக இயற்கை வேறு. மிருகங்கள் எத்தனைதான் தேர்ச்சியடைந்தாலும் மக்கள் ஆகா; மக்கள் எத்தனைதான் தாழ்ச்சியடைந்தாலும் மிருகம் ஆகார். அப்படியானால் மக்களுக்கும் விலங்கிற்கும் உள்ள பேதம் என்ன?

ஒருபேதம் என்னவென்றால், மிருகங்களுக்குரிய தேக உபாதிகள் எல்லாம் மனிதருக்கிருக்கிறதுமன்றி, அவைகளுக்கு இல்லாத, வேறு அநந்தம் துறைகளும் அவர்களுக்குண்டு. உதாரணமாக, குதிரையைப் பாருங்கள். அதற்கு நித்தமும் ஒரேவித

, வைக்கோல், கொள்ளுமுதலியவற்றைப் போட்டும், அது அதுகளைச் சவிப்பின்றி, ஆவலுடன் தின்று பதியடையும். மனிதனுக்கோவென்றால், நேற்று உண்டது இன்றைக்கு வெறுப்பாயிருக்கிறது; நேற்றுக் கண்டது இன்றைக்கு விகாரமாயிருக்கிறது. நேற்றுக் கேட்ட இசை இன்றைக்கு இசையற்றதாய் இருக்கிறது; நேற்று உடுத்த உடை இன்றைக்கு அவலட்சணமாய்க் காணப்படுகிறது. என்னகாரணத்தினால்? மிருகமானது அதின் தேகத்திற்கு இன்றி அமையாத குறைகளை நிவிர்த்திசெய்கிறதினால் பூரண திருப்தி அடைகின்றது. மனிதனோவென்றால், தன் தேகத்திற்கு இன்றி அமையாத குறைகளை நிவிர்த்திசெய்துகொண்டாலும் பூரண திருப்தியடைகிறதேயில்லை. அறுசுவை உண்டியினால் அவனுடைய நா ருசி அடைந்து வயிறு நிரம்பினாலும், பற்பல பானதிகளினால் அவனுடைய தாகம் தீர்ந்தாலும், விநோத விசித்திரகாட்சியினால் அவனுடைய கண் களித்தாலும், இனிய ஓசையினால் அவனுடைய செவி குளிர்ந்தாலும், அருமையான ஆடை ஆபரணங்களினால் அவனுடைய தேகம் பிரகாசமாய் சொலித்தாலும், இன்னும் அளந்த இன்பத்தடாகங்களில் அவன் நித்தம் நீராடிவந்தாலும், அவனுக்குத் திருப்தி என்கிறதே இல்லை; அவனுக்குள்ள குறைகளும் ஆசைகளும் நீங்குகிறதுமில்லை, அடங்குகிறதுமில்லை. ஆசாபாசங்களில்லாத புருஷன் அத்தி பூத்ததுபோலாம். ஒருகுறை நிவிர்த்தியாகிறதற்குள்ளாக, இன்னொரு குறை எங்கேயோ இருந்து முளைத்தெழும்புகிறது. மனுஷ ஆசைகளும் சரி, இலங்கேஸ்வரனுடைய பத்துச் சிரசுகளும் சரி. அவைகள் அறுக்கவறுக்க வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. "ஆசை பெரிதோ, மலை பெரிதோ" என்கிறதும் பழமொழிதான்.

இந்தப்பிரகாரம் மனிதனானவன் மிருகஜீவன்களினின்றும் விசேஷ பேதமுடையவனாயிருக்கிறான். அவனுடைய ஆசாபாசங்களுக்கு அளவில்லாதிருக்கிறதுபோலவே, அவற்றின் வழிவகை துறைகளுக்கும் அளவில்லை. எங்கே பார்த்தாலும் மனுஷ ஆசைகளும், மனுஷ எண்ணங்களும் உருவெடுத்து விளங்குகிறதைக் காணலாம். சிலர் கோவில் கட்டுகிறார்கள், சிலர் சத்திரம் கட்டுவிக்கிறார்கள்; சிலர் போர்புரிந்து நாடுநகரங்களை ஜெயிக்கிறார்கள்; சிலர் துறவறம் பூண்டு தபசுசெய்கிறார்கள்; சிலர் கிரந்தகர்த்தாக்களாகிறார்கள்; சிலர் கலகங்களை எழுப்புவிக்கிறார்கள்; சிலர் திரவியம் குவித்துவைக்கிறார்கள்; சிலர் சிற்றின்பம் நாடுகிறார்கள்;சிலர் பேரின்பம் தேடுகிறார்கள்; சிலர் நூதனக் கருவிகளைக் கண்டுபிடிக்கிறார்கள்; சிலர் கல்வி கற்கிறார்கள்; சிலர் கொலைகளவு புரிகிறார்கள்; சிலர் பொய், கோள், கடுஞ்சொல் சொல்லுகிறார்கள்; சிலர் உபதேசம்பண்ணுகிறார்கள்; சிலர் லோகமெடுக்கிறார்கள்; சிலர் முத்துக்குளிக்கிறார்கள்; சிலர் வேளாண்மை செய்கிறார்கள்; சிலர் கைத்தொழில் புரிகிறார்கள்; சிலர் சும்மாவிருக்கிறார்கள். சும்மாவிருக்கிறதும் மனிதனுக்கும் விலங்குக்குமுள்ள ஒரு பேதந்தான். இரைதேடாமல் சும்மாவிருக்கிற விலங்கையாகிலும், பறவையையாகிலும் எங்கேயாவது கண்டதுண்டா?

எண்ணத்தொலையாத இந்த மானிடக்கிரியைகளையெல்லாம் ஹிந்துசாஸ்திரிகள் தர்மார்த்த காமமோட்சம், அல்லது அறம், பொருள், இன்பம், வீடு, என நான்கு கூறுசெய்து இதுகளுக்குப் புருஷார்த்தம் என்ற பெயருமிட்டிருக்கிறார்கள். புருஷார்த்தம் என்கிற சம்ஸ்கிருத தொடர்மொழியானது புருஷ, அர்த்தம் என்னும் இருபதங்கள் தீர்க்கசந்தியாற் புணர்ந்து முடிந்தது. புருஷார்த்தம் என்பதற்கு மனிதன் செய்யத்தக்கது அல்லது கருதத்தக்கது என்பதே பொருள். மனுஷன் செய்யத்தக்கவைகளே புருஷார்த்தங்கள்.

செய்யத்தக்கவைகள் எல்லாம் புருஷார்த்தங்களாயிருந்தாலும், இவைகளுக்குள்ளும் உயர்வு தாழ்ச்சி மெத்த உண்டு. "திரைகடலோடி திரவியம்தேடுதல்" செய்யத்தக்கதுதான். ஆயினும் "அறஞ்செயவிரும்பல்" அதிலும் சிறந்ததென்று யாவரும் ஒப்புக்கொள்வார்கள். சுய சுகத்தை நாடாமல் பரோபகாரியாய்ப் பிழைத்தலோ இவ்விரண்டிலும் சிறந்ததென்பதை ஒருவராகிலும் ஆக்ஷேபியார்கள். பரமபுருஷார்த்தம் என்கிறதின் பொருள் இப்பொழுது உங்களுக்கு ஒருவாறு விளங்கும் என்று நம்புகிறேன். மனிதன் இவ்வுலகவாழ்வில், செய்யக் கருதும் காரியங்கள் எல்லாவற்றிலும் மேலானதே பரம புருஷார்த்தம். இதுவிஷயத்தில் மனிதர் மிகவும் நிர்விசாரமுற்றவர்களாயிருக்கிறார்கள். பரமபுருஷார்த்தம் இன்னது, அதை நிறைவேற்றுவது இன்னவிதம் என்று மனுஷாள் சாமானியமாய் விசாரிக்கிறதில்லை. "ராமன் ஆண்டாலுஞ் சரி, ராவணன் ஆண்டாலுஞ் சரி" வயிறுபிழைத்தால் போதும் என்று எண்ணிக்கொண்டு, புருஷார்த்த விசாரணையில் எள்ளளவும் சிந்தை வையாமல் காலக்ஷேபஞ்செய்கிறார்கள்.

(இன்னும் வரும்.)

மாதாந்திரப்பத்திரிகை: இதன் விலை 1 பை: 25 பிரதிகள் 2 அணா.
No. 9. ஜூலை, 1888.

# NEWS AND NOTES.
## வர்த்தமானக்குறிப்புகள்.

**ருஷிய ரெயில்வே.**—ஆப்கான்ஸ்தானின் எல்லைமட்டும் செய்திருக்கிற ஓர் ருஷிய இருப்புப்பாதை இம்மாசம் 27உ பிரதிஷ்டை பெறும்.

---

**தங்கக்கட்டி.**—தென் ஆப்பிரிக்காவிலே 3 அங்குல ஆழத்திலே தங்கக்கட்டி ஒன்று அகப்பட்டதாம். அதன் எடை சுமார் 4 வீசையும் அதன் விலை 10,000 ரூபாயுமாம்.

---

**சமுத்திரபாலம்.**—இங்கிலாந்தையும் பிரான்சையும் பிரிக்கின்ற இருபதுமைல் அகலமுள்ள டோவர் என்னும் ஜலசந்தியின்மேல் ஓர் வாரதிகட்ட உத்தேசித்திருக்கிறார்கள்.

---

**ஜர்மன்சக்கரவர்த்தி.**—ஒரு வருஷகாலமாய் விப்புரிதியினால் வியாதிப்பட்டிருந்த நமது இராணியின் மருகனும் ஜர்மன் சக்கரவர்த்தியுமான பிரடிரிக் என்பவர் சென்றமாதம் பதினைந்தாம் தேதி தேகவியோகமானார்.

---

**சென்னைமியூனிசிப்பாலிட்டி.** — சென்னை நகரத்து மியூனிசிப்பாலிட்டி என்னும் சங்கத்தார் ஆஸ்பத்திரி போலீஸ் செலவுக்காக வருஷந்தோறும் கவர்ண்மெண்டாருக்கு 50,000 ரூபாய் கட்டவேண்டுமென்று ஆஞ்ஞாபித்திருக்கிறது. இப்பெருந்தொகையை எவ்வாறு சேகரிக்கப்போகிறார்களோ?

---

**இந்திய மாகாணமொன்றில் விக்கிரகாராதனை ஒழிந்தது.** — இந்தியாவின் வடக்கில் பங்காளநாட்டிலே உள்ள கூச்பேயார் என்னும் ஓர் சுதேசராச்சியத்திலே விக்கிரகாராதனையும் பலதெய்வ வணக்கமும் நிறுத்தப்பட்டு பிரமசமாஜம் என்னும் ஏகேஸ்வர மதம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

---

**ஆவிக்கூடு.**—ஜோவிஸ் என்னும் ஓர் பிரான்சுக்காரர் சகஜமாய்ப் புகைக்கூண்டு என்று வழங்கும் ஒரு ஆவிக்கூட்டைச் செய்துவருகிறார். அவ்வாகாயக்கப்பல் 200 அடி உயரமுள்ளதாய் ஒரு மணிநேரத்தில் 70 மைல்தூரம் ஓடக்கூடியதாம். இவ்வருஷம் அவரும் சில சிநேகிதர்களும் அதில் ஏறிப் பிரயாணம் பண்ணப்போகிறார்கள்.

---

**ஓர்வித தோட்டாற்சிணுங்கி.**—வியென்னா என்னும் நகரத்தில் உண்டான புஷ்பக்காட்சியிலே ஒருவிதமான தொட்டாற்சிணுங்கி காண்பிக்கப்பட்டதாம். தொட்டவுடனே அச்செடி அசைவற்று இரண்டு தினமளவும் இலைகளை மூடிக்கொள்ளுகிறதாம். அதிலே காற்றுக்கும், மழைக்கும், பூமிஅதிர்ச்சிக்கும் குறிப்புகள் தோன்றுகின்றனவாம்.

---

**இரண்டுவயது விதவை.** — 12 வயதுள்ள ஓர் செட்டிப் பையனுக்கும் 2 வயதுள்ள ஒரு பெண்குழந்தைக்கும் சிலகாலத்துக்கு முன்னே கலியாணம் நடந்தது. பையன் சுரங்கண்டு வெகு சீக்கிரத்தில் இறந்துபோகவே இப்பொழுது அந்தக்குழந்தை விதவையாய்ப் போயிற்று. இனி அதின் கதியை என்னவென்று சொல்வோம்? சிசுவிவாகம் என்னும் இப்பேயை இந்நாட்டிலிருந்து ஓட்டிவிட ஹிந்துக்களுக்கு எப்பொழுதுதான் புத்திவருமோ?

---

**தூரதிருஷ்டிக்கண்ணாடி.**—இதுவரையும் செய்யப்படாத பிரமாண்டமான தூரதிருஷ்டிக்கண்ணாடி ஒன்று இப்பொழுது அமெரிக்காவிலே முடிந்து தீர்ந்திருக்கிறது. அதற்கு மூன்று அடி மைய அளவும் அறுபது அடி நீளமும் உண்டு. அதின்வழியாய் பார்க்கிறவர்களுக்கு இரண்டரைலட்சம் மைல் தூரத்திலிருக்கும் சந்திரன் 200 மைல் தூரத்திலிருக்கிறதுபோல் தோற்றுகின்றது. இனி அதைக்கொண்டு அநேகவிஷயங்கள் கண்டுபிடிக்கப்படும் என்பதற்குச் சந்தேகமில்லை.

---

**உருள்பனி.**—மலைச்சிகரங்களிலிருக்கும் பனியானது அதிகுளிர்ச்சியினால் உறைந்துபோகிறதுமல்லாமல் சிலசமயங்களில் உருண்டு திரண்டு பெருகிப்புரண்டு அடிவாரத்தில் அதிவேகமாய்ப்போய்ப்பாய்கிறதுண்டு. சில தினங்களுக்குமுன்பு இமயகிரிச்சார்பிலிருக்கும் ஸ்ரீநகர் என்னும் ஊரில் பிரயாணஞ்செய்துகொண்டிருந்த ஒரு அங்கிலேயனும் அவன் 6 வேலைக்காரரும்அப்போதுண்டான உருள்பனியிலே அகப்பட்டு மாண்டுபோனார்கள். பாவமும் இதைப்போலவே உருண்டு திரண்டு மானிடரை மாளச்செய்கிறதாயிருக்கிறது.

To be had of Mr. A. T. SCOTT, Tract Depôt, MADRAS, at Re. 1. per 200 Copies. Postage extra.

Printed at the S. P. C. K. Press, Vepery. 1888.

